வியந்த பன்மகம்புரிந்து
மெய்க்கடன்கழிந்தபி
னயந்து நன்மகப்பயந்து
துறவறத்தை நண்ணினன்
பயந்தபால னினிதுதன்கு
லத்து நீதி பயிலவே. (சு)

முற்பிறப்பி னியல்பறிந்த
முனிவரிற் சாரமுனிவனுந்
தெற்கிடக்கின் மேவி மிகந
திரிசிராம லைக்குள்வாழ்
பர்ப்பதத்த கோமுந்தரான
பரமர் பாதமலரின்மே
லுறைபுகுந்தி னரியபோது
சொரியும் வண்ண மனுகினன். (௰)

கலிநிலைத்துறை.

கண்ட மட்டிலே யுருகினா னுலபங்கண்டு, கண்ட மட்டிலே விடஞ்செறி கடவுளைக் கழுகார், கண்ட மட்டிலேய் கருங்குழ லிறைவியைக் கண்டான், கண்ட மட்டிலே யடங்கிடா மகிழ்ச்சியாற் களித்தான். (௰௧)

பிரம னரண னகத்தியன் முதலிய பெரியோர், பரம யோகிய ரிமையவர் பணிந்திடும் பரனே, காரணு மங்கவற் கிளையவ னிருவருங் காண, விரவி போலவுந் தரு ம்பல முதவிய விறையே. (௰௨)

அனும னென்பவ னருச்சுனன் வணங்கிய வரனே,
யினிய மாதர்க ளெழுவரு மிறைஞ்சிய விறையே,வனை
யும் வார்குழ லுமையவள் வணங்கிய மணியே, தனிய
ரானவர்க டன்னையே யெனச்சொலித் தாழ்ந்தான். (௰௩)

சிவத டத்திலே மூழ்கியம் மலைவலஞ் செய்து
பவம கற்றிடு மொருட்டினி தருச்சனை பண்ணி
நவமு றச்செயும் பன்னசா லையினை நண்ணித்
தவமி யற்றினன் வேதவா சாரனுஞ் சாரன். (௰௪)

சாரமாமுனிச் சருக்க
முற்றிற்று.
ஆக சருக்கம் ௮-க்கு திருவிருத்தம்-உ௱௫௪.

---

## சூரவாதித்தச் சருக்கம்.



கலிவிருத்தம்.

வாழி யந்த வருந்தவ மாமுனி
தாழ்வ றுங்கதை தன்னை நிறுத்தியே
சோழ னவ்விடைத் தோன்றி யதுமவன்
கோழி மாநகர் கண்டதுங் கூறுவாம். (௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மண்ணி லழியாப் புகழ்படைத்த மனுவின் குலத்திற்
சனநாத

வண்ணன் மகிழ வவதரித்தா னசசா சூளா
மணியென்பா [டைவா
னெண்ணெண் கலைகண் முழுதுணர்ந்தா னெழுவிற ப
ளிவைதெரிந்தான்
பண்ணும் பரியும் பரிதேரும் பகடுஞ் செலுந்தல
பயின்றனனே. (௨)

அந்த மகனைச் சனநாத வளவன் புடவிக்
காசனெனத்
தந்து புலனைந் தையுமடக்கி முயன்றான் யோக
சாதனையை
மைந்த·னவனி முழுதினையுந் தளரா தளிந்து
மதிககவிகை
சிந்து நிழலா விளைப்பகற்றி நடந்தா நின்றான்
செங் கோலே (௫)

எட்டா னைகளுஞ் சுமைதவிர வுரகா திபனு
மிளைப்பகலக்
கட்டா நின்ற வரியகழல் பகைத்தார் முடியிற்
கதிர்பரபப
வொட்டா ரளக்கும் பெருந்திறையா லிமையோ ருலக
மூடுருவக
கொட்டா நிற்க மும்முரசும் புரந்தான் மனுவின்
குலமணியே. (௬)

எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

பொங்க விப்படி யுயிர்பு ரந்தெழு
புடவி தன்னைவ லஞ்செய்வான்

சிங்க ளத்தவர் யவனர் பப்பரர்
சீனர் சோனகர் சோளர்
வங்கர் குச்சரர் கூர்ச்ச ரத்தவர்
கோச லத்தர் வணங்கவே
துங்க பத்திரி தண்பு னற்சொரி
தூய தின்கனை மேவினான். (௬)

கலிநிலைத்துறை.

அமலை யின்கனை நூதற்கணு னடிபணிந் ததற்பின்
கம்பை யின்கனை யுமையிடத் திறைவனைக் கண்டு
பம்பை யின்கனை யழகிய நாதனைப் பணிந்து
செம்பொ னம்பல வாணனை வணங்கினன் சிரத்தால்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

கனலுருவ மாயிருந்தான் மலர்க்கையின்மான் பயந்தக
லுங் கங்கை யாடன்
மனமுருகி வெதும்புமற்றை மலைமாதுந் தளருமென்
றோ வடிவ மெல்லாம்
புனலுருவ மானவனை யமிர்தகதிர் புனைந்தவனைப் பொ
ருந்துங் கோடி
தினகரனை நிகர்த்தவனைத் திருவானைக் காவானைச் சேவி
த் தானே. (எ)

வெண்ணாவ னிழலானே யகிலாண்ட நாயகியா மேனை
யீன்ற
பெண்ணாவ லுடனனைக்கும் பெருமானே மாணிக்கப்
பிறங்கல் போலும்

வண்ணுவல் லசுராபுர மெரித்தானே பெருங்கருணை
வழியா நிற்குங்
கண்ணுவல் வணிந்தமிடற் றரனேயென் றடிபணிந்து
களித்துப் போனான். (௫)

வேறு.

பொன்னி கடந்து சிவகங்கை முதலாந் தடங்கள்
புடைசூழ
மன்னி விளங்குஞ் சிராமலையின் சிகரக் கொழுந்தை
மனத்தகுழற்
கன்னி மயிலை விழிகுளிரக் கண்டா னுடலங்
களிப்புற்றான்
சென்னி வணங்கி யடிபணிந்து நடந்தான் மேலைத்
திசைதனிலே. (௬)

வேறு.

காவல னின்பொடு மேறிசை யின்புடை கானில்
வரும்பொழுதார்
மாவுகை யுந்திறல் வீரர்மதங்கய மூவுகை
யுநதகையோர்
மேவுதல் கண்டெதிர் சீறியு டன்றழல் வேகமி
குந்தலைநேர்
கூவியு கைந்நெதி ராகக டந்தொரு கோழிதொ
டர்ந்ததுவே. (௭)

மேலெழு மண்கிளை யாவிழு மென்சிறை வீசுமி
குந்தெழுகால்

போரெழு மிந்திர ஞாலமெ னும்படி போய்மறை
யுந்நகைமேல
வாலைய றைந்திடு மோடிவ ருந்திசை மாறிவ
ருந்நனையே
கோலுமி ருஞ்சிறை தாழமு கங்கொடு கோதிவ
கிரந்திடுமே. (௰௧)

வேறு.

மரங்களி லொளிக்கு மிள வனையிடைக் குதிக்கும்
வீரர்
சிரங்களை நெருக்கும் வாசித் தலையின்மேற் செறியும
யானைக
கரங்களி லிருக்கும் பாகர் கவசமே லிருந்து
மேலம்
பரந்தனி லுகையுந் தீண்டிற் றடிந்தெனப் பறந்து
போமே. (௰௨)

மன்னவன் றனையெல்லா மருண்டதி சயிப்ப
வேழச்
சென்னியிற் செறிந்து சென்னி கவிகைமேற் செறிந்த
போது
பன்னிரு கரத்தோன் கோழிப் பதாகையா
னையாலே
யிந்நில வாசுங் கோழிக் கவிகையா னென்ன
வானான். (௰௩)

வேறு

கொதியாப் பறந்து கவிகையினுங் குதித்துச் சென்னி
குஞ்சரத்தை
யுதையாச் சரண முள்ளழுந்த முகமுள் ளழுந்த
வுள்ளழுந்தப்
புதையாக் குருதி நதிப்படியா மதவா ரணையினும்
பொங்கியது
மதவா ரணத்தைக் கண்டநால் விழிமோ மற்ற
வாரணமே. (௰௪)

கலிவிருத்தம்

பார்த்தனர் மன்னரும் படைக்கை வீரரு
மார்த்தனர் படையொரா மதிசயித்தன
கூர்த்திடு கனையயில் பரிசை விற்கொடு
வேர்த்தன ரரசனும் விலக்கி னானரோ. (௰௫)

அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்

வலத்தினிற் பறந்து மீள விடப்புறம் வளைந்து
போந்து
நிலத்திடை நடந்து வான முகட்டிடை நெடிது
பாய்ந்து
சலத்தினிற் குதித்து மேகந் தலத்திடை யடங்கி
யைந்து
புலத்தையு மடக்கா யோகி மனமெனப் பேயரயிற்
றன்றே. (௰௬)

இத்தல வாசியாலிப் பறவைபோ ரிழைத்த் தாகு
முத்தம தலம்பா மிங்கே யுறைவது கரும மென்று

வத்தலந் தனந்த கோடி யாமிய மாச வீதி
சித்திர மாட கூடங் கோபுரஞ் செய்வித் தானே. (௰௭)

கலிவிருத்தம்.

மன்னர் வீதி நிறைந்தகை மாவின்மேற்
பொன்னி லாமணித் தோரணம் பொங்குதன்
மின்னு மேக மினையென விண்ணவர்
வன்ன வில்லு வளைத்தது போலுமே. (௰௮)

போத கத்தின் மதநதி போதலின்
மாதர் கண்டு மருண்டு வனமுலைச்
சீத சந்தனத் தாற்கரை செய்ததன்
மீது சென்றுநம் வீதி புகுவரே. (௰௯)

செம்பொ ருட்குப் பிரிந்திடு செல்வர்க
டம்பு யத்திற் றழுவி மயங்குவா
ரம்பு யத்திரு வன்ன மடந்தையர்
கொம்பு சுற் றுங் கொடிக ணிகர்க்கவே. (௨௰)

தந்தை மார்வினை யாடிய தண்கழன்
முந்தி ராசி புகுந்து முகிற்கிடை
யுய்ந்த மாரித் துளியொ டுதிர்ந்திடு
மெந்து மாரி விழுவன போலுமே. (௨௧)

ஆடு மஞ்ஞை யனைய மடந்தையர்
பாடு மங்கல வள்ளையின் பாடலுந்
தோடு தங்கு சுரும்பெழு சும்மையு
மோடு தேரி னுருளையி னோசையும். (௨௨)

வெங்க ளிற்றின் விரிந்த விரக்கமும்
மைங்க திப்பரி யாலு முழக்கமுஞ்
சங்கொ லிப்பதுந் தாளமி சைப்பதும்
பொங்கொ லிங்கட லேழும் பொருவுமே. (உரு)

மைய லேற்ற வனங்கொ ளனங்கனை
யைப நீக்கி யழைப்பது போலவே
தைய லார்க டமணியத் தாமரைச்
செய்ய பாதச் சிலம்பு புலம்புமே. (உச)

வேறு.

பற்றிய படிகமண் டபத்தின் பாங்கரிற்
சுற்றிய மரகதச் சிகரந் தோன்றுதல்
கொற்றமென் கனகபங் கயத்தின் கோல்வளை
யுற்றவ னுறங்கிடு முததி போலுமே. (உரு)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

நக்கசெங் கமலத் தாது குடைந்ததி
னறவ மாந்தி
யெக்கர்வெண் மணற்குன் றேறி யிருஞ்சிறை
புலர்த்துந் தும்பி
செக்கர்வெண் பிறையை வாட்டுஞ் சிறுநுதன்
மடவார் கொங்கை
மைக்கருங் குவளை மாலை மாலையில்
வைகு மன்றே. (உகா)

அரவுகொப் புளிக்கு நஞ்சு மமிர்தமும்
மொழுகப் பார்வை

முருகுகொப் புளிக்கு முல்லை முகைபென
　　விளங்க மூர
விரவிகொப் புளிகரும் வெய்யி லிருகுழை
　　யெறிப்பச் செங்கைக்
குருகுகொப் புளிககப பந்து பயிலுவார்
　　கோடி பேரே. (உஎ)

பொற்கலா பார மின்னப் புணர்முலைக்
　　கலன்க ளோங்க
விற்கைமா ரனையும் விறகும் புருவவில்
　　விழியம் பேவக்
கற்கொணு மழலை யன்னங் கலாபமா
　　மயூரஞ் சூழ
நற்கழங் காடிப பாடு மாதரந்
　　நகர மெல்லாம். (உஅ)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மூசு வண்டு வாச முண்டு முகிலிடத்து
　　முரலவே
மாசில் கெண்டை மீனிரண்டு வள்ளை மீது
　　துள்ளவே
பூசல் கொண்ட வாளி யைந்து பூங்கரும்பு
　　பொழியவே
யூசலின்க ணாடுகின்ற மாத ரந்த
　　வூரெலாம். (உகூ)

மழைத வழ்ந்த சிகர கூட மாக கர்க்குள்
வைகிறு
னழக மைந்த குங்கு மக்கு ழம்ப ளாவி
யறுபதங்
கொழுதி யங்க ராக நுங்கி மங்கை மாதர்
கொங்கையா
ஆழுத சந்த னந்தி மிர்ந்த வொளிகு லாவு
மார்பினன். (௩௰)

நபன மண்ட லஞ்செ றிந்த சயில மன்ன
வொளியதா
மிபம டங்க லெழுது செம்பொ னாச லத்தி
லெய்திறு [கை
னபிந யங்கள் பெறுகு ரும்பை யனைய கொங்
மங்கைமா
ருபய செங்கை கவரி வீச வூச லாடி
தாரினன். (௩௧)

கலிநிலைத்துறை.

தோன்று மிக்கதை நிறுந்திமேற் கதையினைச் சொல்கேன், கான்று தேன்கமழ் வாரிசங் குவளைசெங் கழுநீ, ரான்ற சண்பகங் குருந்துமல் லிகைதள வனைத்து, மூன்று காலமு மிறையவற் கணிந்தனன் முனிவன்.

எந்த நாணமக் கிறையவ னருள்செயு மென்றே
புந்தி மேவுற நினைந்துமா முனியுறை பொழுதி

ளைந்து மாமுக னேவலா லழைக்க வந்ததுபோன்
மந்த மாருதங் கொணர்ந்தது புதுமலர் மணமே. (௩௩)

இன்ன பூமண மெதுவெனத் தெளிகிலா னிறைவன்
சொன்ன பூமண மிதுவென மனத்திற் றுணிந்தா
னன்ன போதினை யரியயற் கரியவற் கணிந்தார்க்
கென்ன பேறரி தென்பெற வருள்செயா னென்றான்.

தானு வானவற் கிம்மல ரணிந்தவர் தம்மைக்
காண வேண்டுமென் றிருந்தன னவன்றுயில் கனவி
னூண முடை மாதர்தம் வரவெலா நாளை
வேண வாவினாற் றெளியலா மறைந்து நீவினவில்.

மனதி னெண்ணமு முடிந்திடு மெனச்சொலி மறைந்தா
கனவு தீர்ந்தபி னற்றையின் கடனெலாங் கழித்தா [ன்
னினன கன்றவல் லிருளிலோர் புறத்தொளித் திருந்தா
பனக நாட்டினு மடந்தையர் நடந்தனர் பரவ. [ன்

மண்ணி னிற்சிவ தடத்தொரு பிலத்து நல்வழியா
னண்ணி யற்புத மடந்தைய ரொழுவரு நடந்து
புண்ணி யச்செழும் போதுடன் புகன்றிடு பொருள்க
ளெண்ணி ரட்டியுங் கொணர்ந்துவந் தருச்சனை யியற்றி.

பின்னை நேருவார் வலஞ்செய்து வணங்கினர் மீண்டார்
மன்னு மாதவ னெழுந்தனர் முன்புபோய் வளைத்தான்
கன்னி மார்களு மதிசய மிதுவெனக் கருதி
யென்ன காரண மிவனமைந் தடுத்தவா றென்றார்.

எண்ணில் காலமா விருட்பொழு திடையில வைப்தி
யண்ண லார்பதந் தொழுதுமீண் டெம்முல கடைவோங்
கண்ணி லெமை யொருவருங் கண்டதாக் காணேயு
புண்ணி யாபுகல் யாவனீ யெனமுனி புகல்வான்.

என்ற னுமமுஞ் சாரனென் றிசைப்பரீ திருக்கா
சென்று மாதவ ரிருடியா மானவர் தேவா
நன்றி யாலா னருச்சனை புரிவதே நன்மை
யன்றி மங்கைய ரருச்சனை புரிந்திட லாமோ (சும)

அஞ்சு சுத்தியும் புரிந்துநல் லாகமந் தடைவே
வஞ்சி மங்கையர் பூசனை முடிப்பது வழக்கன்
றஞ்ச லிப்பதே கருமமக் தடுக்கழி வென்று
னஞ்ச கற்றிய காருட மியற்றிய நாவான். (சுக)

உத்த மத்தவ னிவ்வணஞ் சொலவவ ருரைப்பார்
பத்தி பெற்றவர் யாவரும பணியலாம பரனை
புத்த ராவ தெறிந்தது சிலைகொலோ போதா
முத்தி பெற்றவ னல்லனோ வேடனு மொழிவீர். ( )

யானை யேமுத லெறும்பது கடையதா வனைத்தும்
வான நாடனை வழிபட லில்லையோ மலரான்
ஞான முற்றவ ரல்லரோ கிரியையி னடப்போர்,
ரோனை யோர்க்கெலாம் பத்தியே மூலமென் றிசைத்தார்.

வீர வேல்விழி மடந்தைய ரிவையெலாம் விளம்பச
சார மாமுனி மொழிவனீ ருரைத்தது தகவே

யிர வன்பினுர்க் கருளுப தேசமு மெய்திற
சேரு நன்கனி பாலுடன் கலந்திடு செயலாம். (௪௪)

பரவு கூர்விழி விடத்தினுற் கடிதடப் படந்தான்
மருவு நீள்மணிச் சுடிகையா லரவென வரலா
லுரக நாட்டுறை மடந்தையாக் கொருபுடை யொப்பிர
தெரிகி லேனுமை யாவுநீ ரெனவுரை செய்வார். (௪௫)

நாக நாட்டுறை யிறைவன் புதல்வியா நாங்க
ளேக மாகவே யிந்தலந் தெழுவரு மெய்திச்
சோக நீங்கிடப் பாதலப் புதுமலா தொடுத்துப்
பாக வான்மதி முடியவற் கணிகுவோம பாவி. (௪௬)

கலிவிருத்தம்.

தத்துவஞ் சடந்தவர் தாயி னல்லவர்
பத்தருக் கினியவர் பரம யோகியர்
சித்தருந் தெளியவர் திருவி னாயகர்
புத்திராக் கரியவ ரென்று போற்றினர். (௪௭)

கலிநிலைத்துறை.

அரிவை மீருமத் தருச்சனை யழகியத் ததற்கே
குரவர் பாலுப தேசமு நலமெனக் கூறப்
பாவி நல்லுப தேசநீ ரருள்கெனப் பகர்ந்தார்
தெரிவை மார்களுக் கருளினு னவனுப தேசம். (௪௮)

அடிக ளேயுமக் கடியவர்க் கடியோம் பதிக்கு, விடை-
கொ டேகுவோ மெனச்சொலிப் பதத்தின்மேல் வீழ்ந்

தார், படைவ ராவிறை புதல்விய ரெழுவரைப் பார்த்துத்,
தொடர்ப தானதன் பிறவியின்வரவெலாஞ்சொன்ஞன்.

இற்றை நாளிலென் கனவினி லிறையவ னெய்தி
யுற்ற வுங்களைக் காண்பது முதலெலா முறைதான்
கற்றை வார்குழன் மடந்தையீ ரவ்வணங் கண்டேன்
சுற்ற மாயினீ ருமதகருங் கருத்திணைச் சொல்கேன்.

பாத லத்தினீர் கொணர்ந்தவிப் புதுமலர் பலவும
பூத லத்திலே கொணர்ந்துநல் லருச்சனை புரியி
னேத மற்றிடு முத்தியா மெனவிறை யிசைத்தா
ஞத லிறபுது நான்மலர் வேண்டினே மதறகா. (ருக)

உங்க ளூட்டின்யாம வருகுவோம் வருந்திற முரையீர்
தங்க நாட்டிய ிறத்தினீ ரெனகூசொஞன் றவத்தோ
னெங்க ளூட்டினீர் வருகுவ தரிதரி தென்றார் [டியார்.
கொஙகை நாட்டமென் றிணடினுங் கொலைசெயுங் கொ

பிலம தாம்வழி யுலகெலாங் கடுவிருட் பிழம்பு
விலகொ ணாதது யாவது மாசுண வீடீ
ரிலகு மன்னனைக் காணவு மருமையுண் டெவர்க்கு
மலகு மக்குவங தெய்துமோ வருமையோ வறியோம.

என்று கூறினூர் யாவையு மிறையவ னியற்கை
யன்றி வேறிலை யடியவா நினைவெலா மளிப்பான்
சென்று போதுமென் றுரைத்தனன் யோகியா திலக
னன்று நீரொழுங் தருள்கவென் றவருமுன் னடந்தார்.

சிவத டக்கனைப் பிலவழி முனியுடன் சென்று
தவமு தற்றனை யொருபுடை நிறுத்தியே தந்தைக்
குவகை யுற்றிடத் தவமுனி வரவினை யுரைத்தா
பவம கற்றினுன் றனையழை யெனவவர் பணித்தார்.

வந்த மாதவ முனிவனைத் தவிசின் மேல் வைத்திட்
டெந்த மாதவ மியற்றினே னீர்வரவென்ற
னந்த மாதவ னுரைசெய்வா னுலகமா மனைத்து
முந்து மல்வினை யரும்பென முடித்திடு முதலே. (நிகா)

வைய முண்டவன் றன்னையுந் தாங்கிடு மணியே
யைய னுடலே விழியினு லருந்துநல் லமிர்தே
மெய்ய தாகவே வியாகர ணங்களை விரித்தோ
யுய்யு மாறனை யடைந்தன னெனவவ னுரைப்பான்.

வந்த காரியம் யாதென வுரைசெய்வான் மணச்செவ்
வந்திமாமலர் வேண்டியே யிவ்விடை வந்தே
னெந்தை யாயரு ளென்றன னெழுவரு மிசைத்தார்
தந்தை பான்முனி பிறப்புமற் றவன்செயுந் தவமும்.

மாத வத்தனே நறுமலர்ப் புதலைமண் ணுடனே
கோத கற்றியே கொண்டு போதுக வெனக்கொடுத்திட்
டாத வற்கிணை யானசெம் மணிகளு மளித்து
மேதி னிக்கணே யருச்சனை புரிகென விடுத்தான்.

தன்க ணங்களிற் சிலர்தமை யழைத்திவர் தமக்குப்
பின்பு சென்றிடு மெனச்சொன னவருடன் பெயர்ந்து

நின்கு லாவமு னடந்துநீள் பிலவழி மீண்டு
வன்பி லாமுனி யவையெலாங் கோயின்முன் வைத்தான்

கலிவிருத்தம்.

வாமுனி கொணர்ந்தசெவ் வந்தி மாமுத
றாணியுந் தாணியிற் றருதல் வேண்டியோ
விரிசதிர்க் கரங்களை யூன்றி மேற்றிசை
யிருளுறு பாதலத் திறங்கி யிட்டதே. (௯௧)

முகிழ்நகை யிளமுலை முளரி வாண்முகப
புகரயில் விழியினார் புலவி நீங்கினார்
மகிதல மிசைந்துசெவ் வந்தி வந்ததென்
றகிலமு நிறைந்துசெவ் வந்தி யானதே. (௯௨)

மேனிறை கங்குலின் விரிந்து வெள்ளிய
பானிறை யுடுக்கணம் பலவுந் தோன்றுதன்
மாநிலம் பாதல மலைக் காட்டுமுன்
வானமுங் காட்டிய வாறு போலுமே. (௯௩)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அட்டமா நாகந் தம்முட் குணதிசை
யரவந் தங்க
ளிட்டமா மின்றவ ளந்த புதன்மல
ரெடுக்கும் போது
கொட்டியே பழுது பார்த்துக் குயிறறெனக்
கொடுத்த வெள்ளித்
தட்டமா மென்னக் கீழ்பாற் சந்திர
னுதயஞ் செய்தான், (௯௪)

கலிநிலைத்துறை.

கோத்த நித்தில மணியென மதியுடன் குழுமிப்
பூத்த மீனெலா மகன்றன விடிந்தது பொழுது
வாய்ந்த மாமுனிக் குதவியாய மகபதி வகுத்த
வேற்ற மானதின் பதலைபோற் கதிரவ னெழுந்தான்.

அந்த வேளையி னொருமொழி யுரைசெய்வா னமல
னிந்த நறபுதன் முதலையிவ் விடத்திலே யிசைத்தா
னெந்த நறபுத லொன்றுநா றனந்நமாய் வளரும்
புந்தி யுற்றநம் மடியாதைந நானமே போல. (கூகூ)

கலிவிருத்தம்.

அம்மொழி கேட்டபி னதனை யாங்கவன்
மெய்மலை மேற்றிசை யடைய வித்தினு
னைமமுத லனந்நமா யருமபி யெங்கணுங்
கொயமலர் விரிந்துதேன் கொப்பு ளித்ததே. ( )

சிவகடப் புனலினுற் றெளிந்த போதுகொய
துவைரயிற் சங்கநீ ரொருங்கு வீசியே
தவமுனிவயுநின மிறைக்குச் சாத்தினன்
கவலையும் பாவமுங் காந்து போயவே. (கூஅ)

பொறைநிறை தவமுனி புனைந்த தாரினு
றெுகணி முடிப்பிறை யழகு பெற்றது
மறுவற வளைந்தசெவ் வந்தி மாலையாற்
பிறையொளி விடுவது பேச வேண்டுமோ. (கூகூ)

கலிநிலைத்துறை.

சார மெய்ந்நதவன் கதையினை யிடையிலே தடுத்துப
பார முற்றதோர் கதையினை யுமக்கு நாம் பகர்வோஞ்
சூர வர்க்கனென் றியற்பெயர் படைத்திடு சோழன்
றூர ணிகலெலா மன்னவேபோன் முன்னவ தரித்தான்.

ஏழு மாமுழ வாரணந் துச்சிமே லிருந்தோன்
வாழி குக்குட முயர்த்தொரு மயின்மிசை வருவோ
னூழி யாதவ னெனவுயி ரனைத்தையு மளித்துக்
கோழி மீதினி லிருந்தனன் பெரும்புகழ் குயிற்றி.

அந்த நாளிலோர் தினத்திலே மிருகயாத் திரைக்கு
வந்து கானகத் துலவிநற் றிரிசிரா மலையின்
முந்தி யேகினன் பின்னருஞ் சாரமா முனிவன்
கந்த மார்வனத் தருகினுந் திரிந்தனன் கங்குல். (எஉ)

ஏக வீரனும் வேட்டைகொண் டிலவுமவ் விரவி
னாக கன்னிய ரொருவரு மவ்விடை நடந்து
பாக நாரிய னருச்சனை புரியமுற் படியே
சோக நீக்கிடு சிவதடந் துடைந்தனர் தொகையாய்.

கலிவிருத்தம்.

யுவதியர் கோதையி லொழுகு தேனினு
லவர்வர் கயல்விழி யஞ்ச னத்தினுற்
குவிமுலை யெழுதிய குங்கு மத்தினுற்
சிவதட முழுவதுஞ் சேறு பட்டதே. (எச)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

வேட்டைமேல் விருப்ப மாகிக் கனைமிசை
யுலவும் வேந்தன்
கோட்டுவார் முலையார் மூழ்கிக் குளித்திடுஞ்
செயலை நோக்கி
நாட்டமா யிரங்கள் வேண்டு மெனச்சொலி
நைந்தான் பின்னைக்
காட்டுமான் கவர்வான் மின்னார் கலையெலாங்
கவர்ந்து போனான். (எரு)

ஆபமங் கையர்க ளீரொண் ணாயிர
ரன்று வைத்த
தூயமென் கலையை வாரி யொளித்தவச்
சுதனே போலச்
சேயமென் கலைக ளெல்லாஞ் சீருட
னெடுத்துக் கொண்டு
மாயமோ வென்ன மற்றோ ரிடத்திலே
மறைந்து நின்றான். (எசு)

கலிநிலைத்துறை.

கன்னி மார்களு மூழ்கிவந் தேறினர் கரையிற்
பொன்னின் மேகலை சொரிந்தன பதத்தின்மேற் புனலை
யன்ன மாதரைச் சிவதடப் புனலெனை யகலா
தின்னும் வாருமென் றழைத்தடி பணிந்ததா மென்வே.

வைத்த வெல்லையிற் றேடினர் கலைகளை மாறு
மித்த டக்கரை யெயதியார் கவர்ந்தவ ரென்றார்

சந்தியம் மிவை கவர்ந்தபோ் தாம்விடத் தழலுந்
கொதுத விந்தன மாவரோ வெனச்சொலி யுளைந்தார்.

இன்று பூசனை விலக்கிய பாவியிங் கெவனோ
வென்று கூறிநொந் திரங்கினு ரவர்களுக் கெதிரே
குன்று போலிறை நடந்தனன் மடந்தையர் கூட
நின்ற மாசுண மிறைந்தன விடங்களா நெருபபை.

கடுவி றைந்திடு கனலெலாங் கருடமந் திரந்தாற [ன்
பொடிய டுத்தின் புனலிடைப் புகுந்தவன் போன்று
வடவை யொப்பெனும் விடந்தினை கருடமந்திரந்தாற
றடைய டுத்தினு னிவனெவ னெனவதி சயித்தார்.

ஓதி மம்பொரு நடையினுர் பயந்துநின் றுரைப்பா
ராதி மன்னனீ யென்பதுன் வடிவினு லறிந்தோம்
பேதை வஞ்சியர்க் கிடர்விளைத் திடுவரோ பெரியோர்
நீதி யல்லவு நல்லற மல்லவு நினைந்தாய். (அக)

அலைவ கற்றுவ வுயிரினுக் கழகினை யளிப்ப
வுலகி னுக்கொரு முதவிய மகிழ்ச்சியை யுடைய
கலைமெ னப்படு மறுபத்து நாலையுங் கடந்தோ
யிலகு மெங்கலை பறிப்பது நீதியோ வென்றுர். (அஉ)

நாம முண்டிருண் டலைதருங் குழலியர் சொல்ல
வாம னென்னவே யுரைசெயா தேகினு னூரவோன்
றும வேலினுன் வீரவேள் சூரவா தித்த
நாம னுடிது வல்லவோ வென்றுபி னடந்தார். (அங)

சூர வர்க்கறு மொழிகுவான் மடந்தைநமீர் சொன்ன
பேறா மகருள ஞமகருநா ளிழைந்தது பிழையோ
வேறா டுந்நசி யெழுவரி லொருவனை யிசையுங்
காரணத்தினான் மறைந்துநான் வாரினேன் கலையை.

அன்ன தாகுமென் றவரவர் கலையெலா மளித்துச்
சொன்ன போதத் துடன்படா தவர்களுஞ் சொல்வா
மன்ன நீயெமைத் தந்தைதாய் கொடுத்திட வணாயா
தின்ன வாசகம் பகருவ ததுபழு தென்றார். (௮௬)

அரவ நாட்டவா கடற்புவி யரசருக் காமோ
விருந்து நேர்விட மயிர்துடன் சேருமோ வென்று
ராச னோதுவா னுரகநாட் டவர்மணி யன்றோ
விரவி போலவெம முடியின்மே லிருக்கும தென்றான்.

உங்க ணாட்டிறை யருளினா லுங்களை வரைதற்
கெங்க ணாட்டினின் றும்முடன் வருகுவே னென்றான்
செங்க ணாட்டிய மலமொலாஞ் சிவனடி சேர்த்துத்
தங்க ணாட்டினி லுஞ்சினா ராசனுந் தாமும். (௮௭)

சூதடுத்தபூண் முலையினார் தாதையைத் தொழுது
பாதலத்துநின் பெருமையும் வளமையும் பார்க்கப்
பூதலத்தினே ராசனீங் கணைந்துபூம் பொழிலின்
மீதடுத்தன னெனச்சொல விறைவனும் வியந்தான்.

ஆயி ரம்பணா டவியினான் வருகவென் றருள
வாயி லாளருங் கொணர்ந்தனர் மனுகுல மணியைக்

கோயில் வாயிலைக் கடந்தவ னுறையிடங் குறுகிந
தூய தாண்மிசைப் பணிந்தன னழகுமேற் றுளும்ப.

அகில மன்னனும் வளவனை யணைத்துவந் தருளி
மகர நான்முகத் தவிசின்மே லமைவுற வைத்துப்
புகரி லின்னமிர தளாவிய பனிமொழி புகன்றான்
சகல பாரமு மொருவனைத் தலைமிசைந் தரியபோன்.

அனைய வாசக மவன்சொல வரவநாட் டரசே
புனையு நின்னெழில் காணவும் புகழவும் புகுந்தா
லுனது கண்கள்போ லாயிரத் திரட்டிக ளுளவோ
வினிய நாவுமப் படியெனக் குள்ளவோ விலையே.

ஊர்ப ரிப்பவர் நாட்டினை யளிப்பவ ருலகின்
சீர்ப ரிப்பவர் சிறுபுக ழனந்தமாய்ச் சிறக்குந்
தார்ப ரிப்பது நிகரொன மலரினுன் சமைதத
பார்ப ரித்துநின் றளிக்குநின் றகமையார் பகர்வார்.

அன்ப னேயென மொழிந்தனன் மொழிந்தவற் கனந்த
னின்ப மாகவொன் றுரைசெய்வா னெமதுநா டெங்கு
முன்பு கார்விட நிறைந்ததிப் பொழுதுநின் மொழியாற்
றுன்ப நீங்கியின் னமிர்தமா யினதெனச் சொன்னான்.

விடைகொ டுத்தனன் வளவனும் பெயர்ந்தொரு வீதி
யிடைவ குத்ததோர் மாளிகைத் தவிசின்மே லிருந்தான்
படைம ணிக்கல மமிர்தம்வெண் சாமரம் பனிதந்
தொடைம லர்க்குலஞ் சந்தனம் விடுத்தனன்றுகையா.

இந்திரன்பெருஞ் செல்வமா மெனுமவை யெல்லா
மைந்து தன்புல னாவே மகிழ்ச்சியா லயின்றான்
வந்து கங்குலுங் கழிந்தது மற்றைநா ளனந்தன்
முந்து போலவைக் கெய்தினு னனந்தனு மொழிவான்.

அந்த வாரிதி யுலகினு மிறங்கியிங் கருகில்
வந்த காரிய மெதுவென் வுரைசெய்வான் வளவன்
முந்து நல்வினை கொணர்ந்தது முனிக்குநீ தருஞ்செவ்
வந்தி நின்புகழ் போலவே விளைத்தது மண்ணில்.

இன்று மெங்கணுட் டில்லன விரண்டுள குளத்துச், செங்நெல் வெற்றிலை யெனச்சொனன் மொழிகுவான் சேடன், மன்னர் மன்னவெம் மிடத்தினிற் சிறிதுநா ள் வைகிப், பின்ன ரேகுனக் கவையெலாந் தருகுவோ ம பெரிதும். (கூஎ)

ஈதி ருக்கவென் னுயிர்க்குயிர்த் துணைவனீ யென்றே
யோதி யிப்படி மகிழ்ந்திடு நாளிலே யொருநாள்
பூத லத்திலுன் சேனையெத் தனையுனைப் புணரு
மாத ரெத்தனை பெயரென வுரைசெய்வான் வளவன். ()

ஒங்கு நாறகட லுடுத்தபா ருலகமென் னுலகந்
தீங்கி லாதவை நிறுத்திவெம் பகையெலாந் தீர்த்துத்
தாங்க வேண்டிய தெத்தனை யத்தனை தானை
பூங்கை மாதரு மிருவரென் மனத்தினைப் போல்வார்.()

காடு நாடெலாஞ் செந்நெலும் பூகமுங் கரும்புங்
கோடு முத்தமுங் கமலமு நிறைந்திடுங் குளங்கண்

மேடை யெங்கணு மிரதிபோன் மடந்தையர் விநோத
மாடல் பாடலுண் டமரர்தே வாலய மனைத்தும். (௯)

மந்த ராசல மெனப்பல களிற்றினம் வயங்குஞ்
சந்த னுடவித் தலையிலே தடைபடுந் தபனன்
சுந்த ரானன மடந்தைய ரணிமணித் தொகையா
லந்த காரமு மிலையவர்க் கரியது மிலையால். (௰)

பன்ன சாலையு மறையவர் வேள்வியும் பயிலு
மன்ன தானமே முதலிய தானமு மகலா
மன்ன ரோமுதற் குடிகளும் பலவுள மகவான் [யின்.
பொன்னி னுடெனப் பொன்னிநா டௌதொரு புடை

அங்க திற்கம லாலயம் வேதவா ரணியங்
கங்கை சுற்றிய வம்பல மம்பர்மா காளம்
புங்க நற்பதி புகலிவெண் காடான் புகலூர்
மங்க லக்குடி கஞ்சனூர் சேய்ஞலூர் வழுவூர். (௰௨)

வைகை யென்றொரு நதியதன் கரையிலே மதுரை
மைய னீக்கிய தலமிரா மீச்சுரம் வடக்கே
யையன் வைகிய வதிகைதென் கோவலூ ரருணை.
துய்ய கம்பையிற் காஞ்சியென் றொருதலந் துலங்கும்.

கச்சி மாநகர் தனக்குநேர் வடக்கிலே காசி
பச்சி மத்திலுங் குணத்திலு மருங்கிலும் பலவுண்
டச்சு தன்குகன் கோயிலு நதிகளு மனந்தங்
குச்ச ராதியே முதலிய தேசமுங் கோடி. (௰௫)

பர்ப்ப தங்களும் பலவுள மணிகளும் பலவுண்
டற்பு தங்களும் பலவுள வென்றிவை யறைந்தான்
சர்ப்ப ராசனு மகிழ்ந்துசிங் காதனத் தவிசு
மெற்செ றிந்தசெம் மணிமுத லானவு மீந்தான். (௱௬)

மற்று மொன்றவற் குரைசெய்வான் மன்னவா வுன்னைப்
பெற்ற தந்தையேழ் பிறவியிற் பெறும்பயன் பெற்றான்
கொற்ற வேந்தர்கள் பலருள ரெனினுமிக் குணத்தைக்
கற்ற வேந்தனீ யன்றிவே றொருவனைக் காணேன்.

கூறு கின்றநின் மொழியினா லுடலெலாங் குளிர்ந்த
வீறு கொண்டநின் னெழிலினா லெமதுகூர் விழிகள்
பேறு கொண்டநீ வருதலா லுலகெலாம் பெறுங்கை
மாறு கண்டிலேன் மருகனீ யாகுதல் வழக்கால். (௱௮)

இருவ ருண்டுதோள் புணருதற் கெனவுரைத் திட்டாய்
திருவொ ருத்தியே போதுமோ மார்பகஞ் செறிய
விரிவு மிக்கதன் றேவினு மொருதிரு வேண்டும்
பொருவி லென்மகள் காந்திமா மதியையும் புணர்வாய்.

மன்னர் மன்னனே யெனச்சொன்னான் வளனுண்மகிழ்வுற்
றென்ன நீபணித் திடினும்யா னியைவதே யென்றான்
பன்ன காதிபன் பணிகளுக் குரைத்தனன் பணிகள்
பொன்னி னாடெனத் தமதுநா டனைத்தையும் புனைய.

சேடர் சேனையர் வாயிலை நெருக்கினார் தோரா
லாட ரங்கெலாந் [illegible] மணிகளா லமைத்தார்

மாட மாளிகை தொறுமணிக் குடநிரை வைத்தார்
கூட கோபுரம் புனைந்தனர் நேத்திரக் கொடியால்.

இமச லங்களைத் தெளித்துமான் மதப்புன லிறைத்திட்
டமரர் கற்பக வனமெனக் காவள மமைத்துத்
தமனி யத்தணி மண்டபங் கோயிலுட் சமைத்துக்
கமல நாயகி யுறையுளா மெனும்படி கண்டார். (௱௰உ)

அந்த மண்டபந் தன்னிலோ ராதர மமைத்தார்
வந்து சூரவா தித்தனு மிருந்தனன் மதியு
மிந்து மாமதி யெனவொரு புடையமர்ந் திருந்தா
டந்தை யானவன் கொடுத்திட வேறறனன் றனை.

ஓம வேள்விமுன் வளர்ந்தனன் வலம்புரி யொலிக்கச்
சாம வேளுட னிரதிபோ லிருந்தனன் கலந்து
மாம னங்கவர்க் களித்தனன் றரணியு மணியுந்
தாம வாரமுஞ் சேடியர் பலருமா தனமும். (௱௰௩)

பணிக ளானவை விடைகொடு போந்தன பணிந்து
மணிகு லாமுடி யனந்தனும் புகுந்தனன் மனையிற்
றணிவி லாமயற் காந்தியும் வளவனுந் தழுவி
யணிகொ ளின்பவா ரிதியிலே மூழ்கினு ரழுந்தி.

தாரு மாலையு மயங்கிடக் கருங்குழல் சரிய
வேரு முத்தமுஞ் சொரிந்திட மேகலை மிழற்றக்
கூர வேல்விழி சிவந்திட விளர்த்திடக் குமுதம்
வார முழலை நாஞ்சிலா னுழுதனண் மார்பை. (௱௰௬)

கலிவிருத்தம்.

முற்றிடை யகன்றன கழன்ற முத்தணி
சிறறிடை யவளொடுஞ் செறிந்து சூழ்ந்தன
பொற்றொடி யெனுமுழை பிடிக்கப் போர்மதன்
மற்றொரு வலைகொடு வளைத்தல் போலுமே. (௱ம௭)

பரிபுர மொருதாஞ் சிலம்பப் பல்கலை
யொருதரம் புலம்புற வுவரி யாகிய
சுரதவிஞ் சையிலவன் றோளிற் றுஞ்சினாள்
வரைமிசைப் படர்ந்திடும் வல்லி போலவே. (௱ம௮)

கலிநிலைத்துறை.

அன்ன மேயெழு பிறப்பினு முனைப்பிரிந் தகலே
னென்ன வேபுகழ்ந் துரைத்தன னெழுபிறப் பிகந்த
பின்ன ராயினு மெய்யனீ ரகன்றுளம் பிணிக்குங்
கன்னிமாருடன் புணருவீ ரெனச்சொலிக் கலுழ்ந்தாள்.

வாடி னாண்மலர்த் திருமுகங் கருகினாள் வருந்தி
யூடி னாளவ னூடலை யுணர்த்தினா னுணர்ந்து
கூடி னாரவ ரிருவருங் கலவியிற் குளித்துத்
தேடி னார்தமை யறிகிலா ரிராப்பகல் சிறிதும். (௱உ௰)

உருகி யிப்படி முயங்குநா ளின்னிலவ னுரைப்பான்
முருக லர்த்திரு மடந்தையே யுனதுபூண் முலையா
மிரும ருப்பினை லொசிந்தறு பதஞ்சிறை யிழந்து
மருளி சைக்கொடு தவழ்ந்ததுன் றார்மிசை வண்டு.

இந்த வண்டொரு காலமுன் போலமுன் னிருந்த
நந்த னந்தனி லணையுமோ வுரையென நவின்ற

னந்த வாசகம் பிரிவுணர்த் தியதென்ன வயர்ந்தா
டந்தை பாலவன் குறிப்பையு முணர்ந்திரு டனித்து.

மகளு ரைத்தசொல் விடத்தினுன் மயங்கிய மன்ன
னிகலி னுனையா னிறுத்துவன் வருந்தனீ யென்று
னிகரி லாதுல களிப்பவ னல்லனோ நிருபன்
பகரில் யானுமங் கவனுடன் செல்வது பரிவால்.

போகி மன்னனும் வளவனை யழைந்துநின் புவிக்கு
நாக வல்லியுஞ் செங்கெலுந் தருகுவோ நாளை
யேகு கென்றுதன் மனையிடைப் புகுந்தன னிப்பால்
மோக வல்லிசூ ராவதற் கிருளிலே மொழிவாள்.

அரிய லிங்கமொன் றெந்தைபா லிருக்குமங் கதனைப்
பாவி யீரொழு பாளையு முடியின்மேற் பரித்தான்
புரவ லன்றனை யிரந்துகொண் டென்பதி புகுந்தாற்
பெரிய வின்பமுஞ் சித்தியு முத்தியும் பெறலாம்.

என்று கூறினுண் மற்றைநாள் வளவனங் கெழுந்து
சென்று சேடனுக் கோதினு னொருபெருஞ் சிறப்பை
யன்று செங்கெலும் வல்லியு மருகனுக் களித்துக்
குன்ற மென்னவே மணிகளு நிதிகளுங் கொடுத்தான்.

அண்ண லேயினு மளிப்பதே துனக்கென வறைந்தான்
மண்ணி லேயெனக் கரியது விலையொரு வரமுண்
டெண்ணி லுன்னிடத் திலிங்கமா மிறைவனைப் பூசை
பண்ண வேண்டுமென் றுரைத்தன னனந்தனும் புகர்
[வான்.

எங்கி ளோக்கெலா முறைமுறை வழிபடு மிலிங்க
முங்க ளூக்குநான் றருகுவ தன்றெனவுரைத்துச்
சங்கை யுற்றுள மெலிந்துதன் மனையிடைச் சார்ந்தான்
கங்கு லிற்றுயில் கனவிலே யிறைவனைக் கண்டான்.

பின்கு லாமுடி யனந்தனுக் குரைசெய்வான் விடையோ
னன்பி னூனைப் போலநின் மருகனு மதிக
வின்ப மேனியொன் றிரண்டுகூ றாகநா மிருபோம
மின்பு வேண்டிய தொன்றவற் கருளெனப் பெயர்ந்தான்

புற்ற ராவர சமலனை மகிழ்ந்திருள் புலர்ந்த
மறைறை நாளெழுந் தருசசனை மனையிலே வந்தா
னற்றை நாளிரு கூறதா யிருந்தன னமல
னுற்ற பாதியை மருகனுக் கருளியொன் றுரைப்பான்.

அகித லத்திலே யிருப்பனுன் மகிதலத் தவனி
மகளொ ருத்தியிங் குறைவது முறையல மன்று
தகைப டைக்கலா மரும்பொருள் படைக்கலாந் தருமம்
புகழ்ப டைக்கலா மிவளுடன் புவியைநீ புரந்தால்.

வாழு நாளிலே தனைப்பரித் தவ்வினையும் வருந்தித்
தாழு நாளிலே சரணமென் றவரையே சாரு
மேழை போன்முலை வளருநா ளிடைக்கிட ரிழைத்து
வீழு நாளினுங் காப்பதே கடனென விரித்தான்.

கூற வனுமொன் றளித்துமின் னுடன்விடை கொ
டுத்தான், சூர வாதவ னனந்தனை யணங்குடன் றொ

ழுது, பார கத்திலே யணைந்தான் கங்கையிற் படிந்து,
வார ணத்துரி புனைந்தவன் சிரமலே வணங்கி. (௱௩௩)

மாச கற்றிய கோழிமா நகர்தனின் மன்னி
யீச னைக்கன காலயத் தணிபெற விருந்தி
நாச மற்றதோர் திருவிழா நவங்களா நடத்திப்
பூச னைக்குவேண் டியதெலா முதவினன் புரிந்து

கலிவிருத்தம்.

செந்நெலுடன் வெற்றிலை செறிந்தகொடி. யெல்லா
மெந்நிலமு மாகவென வெங்கணும் விளைத்தே
மன்னனுல கத்துயிர் வளர்த்துவரு நாளிற்
பன்னகத லத்திசிவ பத்தியின் மிகுந்தாள். (௱௩௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அண்ணா விருதா ளருச்சனையைத் தினமுங் கொழுந
னனுமதியாற்
பண்ணி யடிசி லயின்றிடுவ தல்லாற் புனலும்
பருகியிடா
ளண்ணு நியதி தவறாது நடத்தி வருமந்
நாள்களிலே
வண்ண வயிற்று விலேயிளங் கருப்பம் பிறைபோல்
வளர்ந்ததுவே. (௱௩௬)

கருப்ப முதிரத்துந் தவறாதே காலா னடந்து
கயிலை யெனும் [ந்து
பொருப்பின் கொழுந்தி னடிதொழுவா ளொருநா ளட
போம் பொழுது

நெருப்பின் குழவி யெனும்பாலா விளைத்தா ளயர்ந்து
நெடிதுயிர்த்தாள்
விருப்பம் பெருகுஞ் சேடியர்கண் டணைத்தா ரசைத்தார்
விசிறியையே. (௱௩௭)

அன்னங் களிக்கப் பிடிகளிக்க நடந்தா
ளஞ்சா றடியளவு
மின்னு மயர்ந்து மூச்செறிந்து விழுந்தா
ளங்கோர் வெள்ளிடையின்
மன்னன் விடுத்த சிவிகையிலு மேறு
டிரும்பி மனைபுகுதா
ளின்னுஞ் சிவனை யிறைஞ்சியலா லயிலேன்
புனலு மென்றளே. (௱௩௮)

வீர விரத மவள்பிடித்துத் தனையு
மறந்து மெலிவுற்றாள்
சார முனிவன் வனமெனவே தாரா
கிரகஞ் சமைத்தார்க
ளீர வளற்றுச் செங்களப மிறைத்தார்
சொரிந்தா ரிமசலநல்
லார வடங்க ளணிந்தார்கள் படுத்தார்
கழுநீ ரகவிதழே. (௱௩௯)

அயர்ந்து மடந்தை வருந்துதல்கண் டடியார்க்
கெளிய வருட்கடலுஞ்
சயம்பு வடிவா யவளெதிரே யிருந்தா
னந்தச் சங்கரனை

வயந்த மெனவே கற்பகப்பூ மலரைச்
சொரிந்தார் வானவர்கள்
வியந்து பணிந்து வலம்புரிந்து மீண்டாண்
மனைக்கு மென்கொடியே. (௱சஉ)

சூர வருக்க னதிசயித்துச் சூலிக்
கிரங்குஞ் சூலிதனக்
கார மதிலுங் கோபுரமு மணியா
லயமு மமைப்பித்துத்
தேருஞ் சிறப்புந் திருநாளு மகபூ
சனையுஞ் செய்வித்தான்
வீர விரத முன்போல நடத்தி
வந்தாண் மென்கொடியே. (௱சக)

ஈன்றாள் குழவி தனையனுந்தன் சூரவன்
றனிலு மெண்மடங்காய்ச்
சான்றாண் மையினு லறநெறியாற் சிவநூற்
றெளிவாற் றகைபெற்றான்
மூன்றும் பெயரான் முடிவாக நாற்பத்
தாறு முடிமன்னர்
பூன்று குதிசேர் மகமுடித்து மகவா
னுலகம் புக்கனரே. (௱சஉ)

சூரவாதித்தச்சருக்க முற்றிற்று.

ஆக சருக்கம் க-க்கு திருவிருத்தம்-கூ௱கஙகூ.

வ ம ய ம.

# உறையூரழித்த சருக்கம்.



கலிவிருத்தம்.

ஐம்பதாந் தலைமுறை யதனி லேயொரு
வன்பராந் தகனெனு மன்னன் ரேன்றினன்
மின்குலா மணிமுடி மன்னர் மேனியிற்
புன்புலா னிணமழை பொழியும் வேலினன். (க)

அவனிரு புயத்தினுக் கமைந்த மான்றிருப்
புவனமா தேவியோ டுலகம் போற்றினு
னிவனிலே யிருக்கமு னியம்புமாமுனி
சிவனது பணிவிடைச் செய்ய லுற்றனன். (உ)

புராந்தகற் கவனல ரெடுக்கும் பொங்கரிற்
பராந்தகற் கணிமலர் பறிக்க வந்தொரு
பிராந்தகன் மலரெலா மெடுத்துப் பெய்துகொண்
டோாந்திகழ் வேலினற் கணிய நல்கினன். (ங)

அம்மலர் மன்றனுக் கிசை யித்தனன்
செம்மறன் முடிக்கணி சிறப்பெண் ணுமலே
யிம்மலர் தினந்தரு கென்று கூறினன்
மெய்ம்மலர் வணிகனும் விடைகொண் டேகினன்.

மாலையிற் றுயின்றனன் வனத்தில் வந்திளங்
காலையிற் புதுமலர் கவர்ந்து போயினு

றலயந் தினுக்கவை யளிக்கு மாமுனி
சோலையிற் புகுந்தலர்த் தொகைமையைத் தேடினான்.

இங்கிவை கண்டிலே னெம்மை யாள்பவர்
சங்கரன் முடிமிசைச் சாத்தி னார்களோ
வங்கதை யறிவதற் காக வவ்விடைக்
கொங்கவிழ் சிலமலர் கொண்டு போயினான். (௬)

தானணிந் திடுமல ரன்றிச் சங்கரன்
மேனியிற் கண்டில னழுது விம்மினான்
கானகப் புதுமலர் களையக் காவலன்
றேனகப் புனைந்தநன் றேவிக் கீந்தனன். (௭)

அவ்வலர் பகிர்ந்தவ னளிக்கும் போதினின்
மௌவலுந் திறையிடு முறுவன் மாதரா
ளிவ்வலர் சிவன்றனக் கினிமை யாதலாற்
சைவல வோதியிற் றரிக்க வஞ்சினாள். (௮)

காவலர் காவலன் மகிழக் கைதவப்
பூவலர் வாணிப னுதவும் போதினில்
யாவரிவ் வனமதி லெய்தி னாரென
மாவனத் தின்முனி மறைந்து நின்றனன். (௯)

பத்திர னாரெனப் படைத்த போதினைக்
குத்திர வாணிபன் கொய்யு மெல்லையிற்
கைத்தலம் பிடித்தவன் கழுத்தி லேதன
துத்தரி யந்தனைச் சுருக்கி யுந்தினான். (௰)

முன்பிடித் தீர்த்திடு முனியைத் தள்ளியே
வன்புடைக் கயவனும் வலிதி னெய்தினான்
பின்பிடித் தனனிவன் பின்னு முன்னுமாய்
வன்புடைக் காவலன் மனையி னண்ணினான். (மக)

ஆயிரந் தரமுறை யரச வென்றனன்
வாயிலைப் புரப்பவர் வார லென்றனர்
தூயனோ ரந்தண னெறியிற் றோன்றியே
கோயிலுண் முனிவனைக் கொண்டு போயினான். (மஉ)

கலிநிலைத்துறை.

மன்னர் மன்னனு மெதிர்கொடு முனிவனை வணங்கிப்
பொன்னு லாவுநல் லாசனங் கொடுத்தெதிர் புகல்வா
னென்ன புண்ணியஞ் செய்தன னீவரவென்று
னன்னை போலுவா யெவர்க்குநீ புகலிட மன்றோ.

கலிவிருத்தம்.

பாதலத் தினும்புதல் கொணர்ந்து பல்பகல்
பூதலத் தினிற்புனல் பொழிந்து பொங்கரிற்
கோதற வளர்த்தலர் கொய்து தார்செய்து
நாதனுக் கணிகுவே னொரு நாளுமே. (மச)

அப்புதல் வனத்திடை யளிகள் செல்லினுந்
தப்புத லரிதுமற் றெவருஞ் சார்கிலார்
மெய்ப்புது மலரிவன் கொய்து மேவினா
னிப்புலை யனைத்தடிந் திடுக வென்றனன். (மரு)

ஆடா வணிபவற் கலங்கல் பெய்திடுங்
கூடையை யரசுவா பறித்துக் கோடலு
மேடவிழ் தொடையெறி பத்த ரென்பவ
ரோடிவெங் கரிமிசை மழுவை யோச்சினர். (௰௬)

வீழ்ந்தது கடகரி களிற்று வேந்தனுஞ்
சூழ்ந்திது கொடுத்திடு துயர்க்கென் றேளையும்
போழ்ந்திடு கெனச்சொலிப் புனையு மாமுடி
தாழ்ந்தன னதுபெருந் தரும மானதே. (௰௭)

பழுதெனத் தள்ளிய மலரைப் பண்டொரு
முழுமதி முகத்தின ளெடுத்து மோந்தனள்
செழுமலர் தொடுப்பவர் கண்டு சென்றவள்
குழலினைப் பிடித்துமென் குமிழைக் கொய்தனர்.

மங்கைதன் கணவனு மரசன் வந்திவ
ளங்கைமுன் பற்றிய தலனா யாதலாற்
செங்கையைத் தடிந்திவள் வினையைத் தீர்க்கென
வெங்கணு மவன்புக ழிசைக்க வில்லையோ (௰௯)

புழுச்சுமை மலக்குனிவ் புலவு நாறிய
வழுக்குட லீரல்சீ வழியுஞ் செய்யக
முழுக்குட லுதிரநீர் மூளை யின்பொதி
யழுக்குட லதைப்பொரு ளாக வெண்ணுமோ. (உ௰)

உழுநரிக் கணங்களுக் குதவு மொண்பொருள்
கழுகினுக் குணவுகட் டியக ளஞ்சியந்

தழலினுக் கிந்தன மான சட்டக
மெழிலுறப் புனையினு மிருப்ப தல்லவே. (உக)

நரம்புட னெலும்புதோ னட்ட புன்குடில்
வரம்பறு பிணியெலா மெடுத்த வான்கலந்
திரங்குத னரையிடர் புதைத்த சிற்றறைக்
குரம்பையென் றறிந்திலை கொற்ற வேந்தனே. (உஉ)

கலிநிலைத்துறை.

கடிகொ ணீலநுண் மணியெனக் கரும்புழுக் கலந்து
பொடிகொ ணித்தில மாலைபோற் றவளவீர் பொருந்தி
வடிகொண் மாவென வவைக்குளே வருந்திடு மயிர்க்கோ
முடிகொள் கங்கையான் விரும்பிய மலைநீ முடிப்பாய.

கொச்சகக்கலிப்பா.

எட்பகவு மன்பில்லா ரிவ்வுடலிவ் வாறிருந்தாற்
பெட்புறுவர் பேதைமுதற் பேரிளம்பெண் ணீறாக
வுட்புறம்பா வைத்தா லுகிர்ப்பருந்தும் வாயசமு
முட்கமுகுங் கல்யாணம் பண்ண முயன்றிடுமே. (உச)

பௌவங்கர் காலன் பறித்துயிர்கொண் டேகினு
லிவ்வுடல மிந்தனப்பூ மெத்தையின்மே லெய்தியெரி
கௌவும் பொழுது சுடுநாறிக் காட்டுமன்றிச்
செவ்வந்தி மாலைமணங் காட்டுமோ தேர்வேந்தே.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

சண்பகத் தயில நீவி யிமசலந்
தழைய வாட்டி

யொண்புகை கொடுத்து ஈவி மெழுகித்தா
துறந்து மோதி
வெண்புகை நிறுத்து மாய்ந்து வெண்டலை
யான போது
நண்புகை விடாம விந்த நறுமல
ரணிகு வாயோ. (உகூ)

வேறு.

மின்போ லழியும் வயிற்றுமை வடிவா யழியு
மெய்யுருவாய்
முன்போ லழியும் பிறந்தழியு மடவா ருடனே
முயங்கியதன்
பின்போ யழியு நரைத்தழியும் பேய்போற் றிரிந்து
பெயர்ந்தழியும்
பொன்போல் வளர்த்து மிவ்வுடல நிலையாதழிந்து
போய்விடுமே. (உஎ)

கலிவிருத்தம்.

சிவன்றனை யிகழ்ந்தொரு கதையைச் செய்தபோர்
சவம்படு பொழுதவர் தசையை நாடியே
யுவந்துவந் தருந்திய கழுகு மோரியுங்
கவர்ந்தது கசந்தரு வருத்துக் காலுமே. (உஅ)

சிவனது திரவியஞ் சிறிது கொண்டவர்
நவம்தம் படுமெழு நரகு நண்ணுவா
ரவலவெங் குழிகளிற் கிருமி யாகுவார்
குவலயந் தனிலொரு கோடி சன்மமே. (உகூ)

மெய்க்கடுங் கூற்றுவன் படையில் வெம்புவார்
செக்கிடை யரைகுவா ரழலிற றீகுவார்
துக்கமும பிணியுமாய்ச் சுழல்வர் சூகரங்
குக்குட மாகுவர் கோடி சன்மமே. (கூ0)

மானிய நிலம்பதி மகமை யென்பதுந்
தானியந் தனமணி தான மென்பது
மேனிறை கோயிலுள் விதித்த பண்டமு
மானுயர் கொடியினு னமிர்து செய்ததும். (கூக)

தண்டிமுன் கொடுத்திடு தாரு மாரமு
முண்டது முடித்தது மற்று முள்ளவு
மெண்டரு கோயிலின் புறம்பி லெய்திய
வண்டணி தொடையலுங் கொளார்நன் மாட்சியோர்.

அல்லலை யுடையவ ரழுத கண்ணினீர்
செல்வமன் னவர்கெடத் தேய்க்கும் வாளெனச்
சொல்லிய மொழிசெவித் தொளைக்கு ளேபுக
வில்லையோ வுடற்பய னிழந்த மன்னனே. (கூகூ)

வாலிபம் பெருநிலக் கிழமை மாண்பொருண்
மேலறி விலாமையி லொன்றி மேவினுஞ்
சீலமுங் குடிமையுஞ் சுதையு மாவிவை
நாலுமுள் ளவர்செய னவில வேண்டுமோ. (உ௪)

விழிதெரிந் திருக்கவுங் குருடு மேவுவர்
மொழிதெரிந் திருக்கவு மூக ராகுவர்

பொழிமதூ வன்றியு மயக்கம் பூணுவ
ரழிதரு காலமா மரசர் வண்ணமே. (கரு)

திண்புகழ் படைப்பதும் பகைமையத் தேய்ப்பது
மண்புரந் தளிப்பது மன்னர் பேரணி
வெண்கலை முசுதல் கவரி வீசுதல்
புண்களும் படைத்திடும புனலு மாடுமே. (கசா)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

அந்தண ரருளைச் சாரா ரரும்பய மறுக்குஞ் சேதா
மந்திர மறப்பர் நூலோ ராதலான் மகமுண் டாகா
விந்திரன் முதலா வுள்ள விமையவ ரவியூண் கொள்ளார்
கந்தரஞ் சிறிது நல்கா காவலன் கொடுமை யாலே.

இன்புடை யறங்க ணல்லோ ரிளையவர் குரவ ராகத்
தன்பெருங் கிளைகள் சுற்ற மந்திரத் தலைவ ராக
மன்பதை கனிக ளாகத் தானைகண் மணிவீ மாக
வன்பெலாம் வடிவ·மாக வரசுமேல் வளரு மன்றே.

கலிநிலைத்துறை.

தெருண்ட சிந்தனை மன்னவ னீதிநூ றிசையி
னுருண்ட தேரின வென்னுமே விழிகளுண் டெலின்
மருண்டு மன்னனும் விழியொளி மறைந்திடின் மற்றை
யிரண்டு கண்ணினும் பயனிலை யாகுமே யென்றான்.

கற்பு மங்கையர் நிறையெனும் வரம்பினைக் கடந்தால்
வெற்பு நுங்கிட வானகம் புவியின்மேல் விழுந்தா

லற்பு மன்னவன் செய்யகோல் வளைந்திடு மானு
னுற்ப லஞ்செறி மாலையாய் விளக்குவா ருண்டோ.

வேலி யானது பயிரினை நுகர்ந்திட விழைந்தாற்
கால னுருல குயிரெலாங் கவர்ந்திடக் கனன்று
லால மன்னையர் புதல்வருக் கருத்துவ ராஞல்
வேலை வேலையைக் கடக்கிலார் விலக்குவார் வேந்தே.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

சிலையின் பிளவு நிலப்பிளவு மணலின் பிளவுஞ் சிறந்தபுனற்
றலையின் பிளவு மெனநான்கு வகையாம் வெகுளி தனையுடையோர்
தொலைவி னுகம் புள்விலங்கு நாராய்ப் பிறந்து துயருழப்பார்
மலையுந் தகர நிழலுடனே மலையுங் களிற்று மன்னவனே. (சஉ)

கலிநிலைத்துறை.

சொல்லு கின்றவன் றனையிறை தகுதியிற் றொழுது
நல்ல வாசகம் போலவே நகைமொழி நவிற்றி
யலவில் வேறலர் பறித்தவன் றனையெதி ராக்கி
யில்லை யோவலர் பறித்தியோ சூளுரை யென்றான்.

பூவ ளிப்பவ னுரைசெய்வா னிவர்மொழி பொய்யே
காவை யென்னிரு விழியினுற் கனவிலுங் காணேன்
யாவ ரிப்படி செய்துபோ னர்களோ வென்று
நாவ ழற்சுட் மொழிந்தன னரசனு நவில்வான். (சச)

அழிவு காலம தாகையா லலரொடுப் பவனைப்
பொழிலி லேபுகா தகற்றுவோம் போமெனப் புகன்றுன்
வழுவி லாமுனி மன்னரோ தக்கனர் மகம்போற்
புழுதி யாடுமும் மகமுமென் றுரைசெய்து போனன்.
செற்ற மாகவே யிப்படி மொழிதலுஞ் சினந்திட்
டிற்ற மன்னவன் வனத்திலே யொருமல ரின்றி
நிதத நித்தநீ கொண்டுவா வென்றன னிருபன் [டான்.
கொற்ற வேந்தனைப் பணிந்துவா ணிபன்விடை கொண்

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

முடித்திடு மாசர்க் கோர்நாண் முடியாத
பழியுண்டாக
வெடித்தபோ தெல்லா மென்றூழ் வெடியாத
போதிற் கொய்தா
னெடுத்தசெவ் வந்திப் போதி னெதிர்படு
நிழலா மென்னக்
கடித்திகழ் விசும்பிற் ருரா கணங்களு
மறைந்த வன்றே. (சஎ)

குரவனு முனிக்கு நாமுன் கொடுத்தசெவ
வந்தி நாட்போ
தாசனுற் கவரப் பட்ட தெனநினைந்
தரவ வேந்தன்
வரவிடு கனகச் செந்தா மரைப்புது
மலரைப் போலே

பிரவினை யகற்றிக் கீழ்பா லிரவியு
முதயஞ் செய்தான். (சஅ)

கலிநிலைத்துறை.

வண்டு ழுதமு னெடுத்தசெவ் வந்திநாண் மலரைக்
கொண்டு மாமுனி காணவே வணிகனுங் கொடுத்தான்
கண்டு நெஞ்சுநொந் திறைவர்சந் நிதியிலே கலுழ்ந்தான்
பண்டு மாரனை யெரித்தவ ரவனுடன் பகர்வார். (சகூ)

அஞ்ச லஞ்சனீ முனிவனே யவனைநா மழிப்போ
நஞ்ச மன்னவன் றனதுறை யூரிலே நண்ணி
மஞ்சு லாவிய மாளிகை மறுகெலா மருவி
யிஞ்சி சூழுமிந் நகரொழு தினத்திலே யிறக்கும். (ரு0)

அரன ருச்சனை புரிகுவோ ரடியரைப் பணிவோர்
குரவர் சொற்படி யொழுகுவோ ரிரந்தது கொடுப்போர்
நரைமு திர்ச்சியோ ருமறை சிவாகம நவில்வோர்
திருவு டைப்பணி புரிகுவோ ரருமகஞ் செய்வோர்.

துன்று கறபினர் யாவருங் கேளுமின் சொல்கே
ளின்று தொட்டெழு தினத்திலிப் பதியிறந் தேகு
மன்றி லுற்றவ ராணையாற் சொரியுமண் மாரி
யன்றடுக்கழி வாகிய வேந்தனு மழிவான். (ருஉ)

சுற்ற மோடவன் றனையுங் கயவருந் தொலைவா
ரிற்றை நாளிது சிவனுப தேசமென் றெவர்க்குஞ்
சொற்று வாவென வுரைசெய்தார் முனிவனுந் தொழுது
யுற்றை நாளுறை யூரிலே யுரைத்தனன் மறுகில்.

தூய ரானவ ரக்கண மேசெலத் துணிந்தார்
தீய ரானவ ரசங்கதி யாடியிற் செறிந்தார்
தாய ராமென வருள்செயுஞ் சிராமலைத் தலைவர்
வாயு வோடெழு முகிலையும் வரவழைத் துரைப்பார்.

சந்த நான்மறை முனிவனை யிகழ்ந்தவன் றருஞ்செவ்
வந்தி நாண்மலர்த் தொடையலும் புனைந்திடு மன்னன்
பந்த மாகிய கிளைகளோ டழிந்திடப் பதியும்
விந்த மாமென மறைந்திடு மெனச்சொலி விடுத்தார்.

தாமு மந்நகர்க் கெதிர்முக மாகிமுற் றலைந்துக்
கேம மாகவே புறங்கொடுத் திருந்தன ரிப்பான்
மாமு கிற்கண மிடித்ததிர்ந் தெழுந்துமண் மழையைத்
திமு கங்களா லிறைத்தன புனலையுஞ் சிதறி. (ருசு)

சண்ட மாருதஞ் சுழன்றுறை யூரொலஞ் சலியா [துக்
வெண்டி சாமுகந் திரிந்திட வொன்றிலொன் றெடுத்
கொண்டு கீழ்விழ வெறிந்தன பலபல குவையாய்
மண்டி ரண்டன மலைபெருங் குழவிகண் மான. (ருஎ)

கூற்ற மன்னவன் றீவினை விளைந்திடுங் கோழி
கீற்ற டைந்துபல் குழிகளா யுயர்ந்தது கிழக்கிற்
காற்று வந்துதன் கரங்களாற் கீழ்நிலங் களைய
வேற்று மண்களைச சொரிந்தன போன்றன மேகம்.

மாட மாளிகை மறைந்தன மறைந்தன மணித்தே
ராட ரங்கெலாம் புதைந்தன புதைந்தன வகங்கள்
கூட கோபுரங் கரந்தன கரந்தன குளங்கண்
மேடு பட்டன காவுட னுவண வீதி. (ருக)

அந்த மாமுனி யுரைத்ததை யசங்கதி யாடி
யிந்த வாருயி ரிழந்தன மெனக்கரைந் திடுவார்
தந்தை தாயருக் கிரங்குவார் கலுழுவார் தளர்வார்
மைந்த ரானவர்க் குருகுவா ராயினர் மாக்கள். (கூ0)

மழைத னக்கிடு குடையெனக் குழவியான் மறைப்பா
தழைசெ விபடுகர் முகமத மருபபிணை ந் தந்தி
புழைப ரப்பிய வாயிடைச் சிலாசிலர் புகுவா
ரழலி றைத்திடு புயலினுக் கஞ்சுவா ரானார். (கூக)

ஒருவ ருக்கிடை யொருவர்வந் தொளித்தொளித் தொ
துங்கிப், பரிவ ருந்தனை பண்ணிடு மவரெனப் பயில
வார், வெருவி யக்கண நிலவறை செயச்சிலர் விரைவார்,
புரமெ ரித்திடு பொழுதினி லவுணரைப் போன்றார்.

பாவி மன்னவன் றன்னகர் படுந்துயர் பார்த்துத்
தேவி தன்னுடன் பரியின்மேற் குடதிசைச் சென்றான்
மேவு மவ்விடந் தன்னினு மண்மழை விழுந்த
வாவி கொண்டவன் வடதிசைக் காவிரி யடைந்தான்.

சென்னி யவ்விடைத் திரும்பவு மவன்பெருந் தேவி
தன்ன தாகிய கருபபமெய் முதிர்ந்திடுந் தளர்வாற்
பொன்னி யாற்றிடை விழுந்தனள் புலையரிற் புலைய
னென்று மன்னவன் றிரும்பிவந் தவளையு மெடாமல்.

உயிர்பி ழைத்திடி லேதுவிற் றேனுமுண் பாமென்
செயிரி ழைத்தசொற் படியவன் விரைவுடன் சென்று

னயிர்கொ ழித்திடு காவிரிக் கரைபுகு மளவிற்
றுயர்பு டைத்துநொந் தவனொடு வீழ்ந்தது துரகம்.

மாவு மன்னனு மறைந்திடப் பொழிந்தமண் மாரி
காவி னின்றகண் மலரெலாம் பறித்துமுன் கவர்ந்த
பாவி யென்றிவன் விருப்பமா னதுகெடும் படிக்குப்
பூவி னுன்மற்றத் திடுவது போன்றன புயல்கள். (சுசு)

பிறைமு டித்தவர் முனிவினு லயிர்மழை பெய்த
தறையி லித்தனை யாயிரத் தலமென வறியு
முறைக ளிட்டன போன்றிருந் தனவுறை யூரிற்
குறைய றத்திசை திசையெலா நிறைந்தமட் குவைகள்.

கண்ணி னுலருட் பெருமழை பொழிந்திடுங் கடவுண்
மண்ணி னுன்மழை பொழிந்திடு முகிலினை மாற்றிப்
புண்ணி யஞ்செயா வளவனூ ரழித்தது போதும்
விண்ணி லேகுமென் றுரைத்தனன் மறைந்தன மேகம்.

கலிவிருத்தம்.

வன்னி வண்ணர் மலரை முடித்திடுஞ்
சென்னி பட்ட திறமூறை செய்தனம்
பொன்னி யாறு பொருந்திடர் மூழ்கிய
கன்னி மாதின் கதையை விளம்புவாம். (சுகூ)

கலிநிலைத்துறை.

மேனி றைந்தெழ வருந்தியும் புனலிடை வீழ்ந்துஞ்
சூனி றைந்துகொண் டிரும்புனற் சுழிகளிற் சுழன்று

மானி றைந்திடு கொடியவர் திருவரு ளாலே
தானி றந்தில வொழுகின ளனுகின டந்தை. (எ0)

கனைபி லேயருந் தவம்புரி பவனருட் கண்ணன்
பிரம மாநதி யென்பவன் குலத்தினும் பெரியோ
னரிவை யவ்விடை வருதலகண் டெடுத்தன னவடன்
றெரும ருந்துய ரகற்றினு னடைவிலே தேற்றி. (எக)

தந்தை யாறுன தச்சமுந் தளர்ச்சியுந் தவிர்வா
யெந்த வூரிவன் றேவியுன் னுமம்யா தென்று
னந்த னுளனே யன்னையே யந்தனே யருளே
யெந்தை யேயுனக் கடைக்கல மடைக்கல மென்றுள்.

திரிசி ராமலை யிறையவர் திருவுளஞ் சிதைத்த
புரவ லன்னுயிர்த் தேவியான் புவனமா தேவி [ன்
சொரியு மண்மழைக் கச்சமாய் மனுகுலந் தொலைதரோ
குரக தந்தனை யுதைத்தன னென்னையுங் கொண்டு.

அச்ச மாய்விழுந் தாற்றிலே மிதந்துனை யடைந்தேன்
கச்சு வார்கழ லரசனெவ் விடத்தனோ காணே
னெசச மானது வேண்டுமிக் குலத்தினுக் கென்று
பிச்சி யாகியு முயிர்சுமந் திருந்தனன் பிழைத்து. (எச)

ஐய வென்றழு துரைத்தன ளந்தண னவளைப்
பைய வேகொடு சென்றுபோய்ப் புகுந்துதன் பதியின்
மையில் கற்புடை மனைவியோ டுரைத்தனன் வனத்திற்
றையல் வந்தது மவளது பெருமையுந் தகவும். (எரு)

கலிவிருத்தம்.

கருப்பமா னதுநிறை கமலச் சீதையை
விருப்பமாய் வளர்த்தவான் மீகர் போலவே
யருப்பமுங் குறைவிலா தமிர்த நன்புன
றருப்பணா நிகர்மணித் தாம மாலிகை. (எசு)

சந்தன மிமசலம் பனிதந் தண்மலர்
கந்துக மம்மனை கழங்கு பைங்கிளி
சுந்தர வேதிமந் தோழி மார்களுந்
தந்தன னவளது தளர்ச்சி நீங்கவே. (எஎ)

இன்புட னிப்படி யிருக்கு நாளிலே
யொன்பது திங்களு நிறைந்த தொள்ளிழை
தன்புடை மருத்துவத் தலைமை மாதரை
யன்புட னமைத்தன னக்ன்றி டாமலே. (எஅ)

பூரண கருப்பமாய்ப் பொறையு யிர்த்திடுஞ்
சீரிய தினத்திலோர் முனிவன் சேர்ந்தன
ஞோரையுங் கரணமும் யோக முஞ்செறி
வாரமு நன்மையாய் வருதல் கண்டனன். (எகூ)

திரிபுவ னப்பெருந் தேவி யேயின
மொருகடி கையிற்பொறை யுயிர்த்தி டாதுகொள்
பெருநல மெனச்சொலிப் பெயர்ந்து போயினு
னரிவையுஞ் சரணமே லாக நின்றனள். (அ0)

முறநிழை முனிசொலு முகுர்த்தந் தன்னிலே
பெற்றனள் குழவியைப் பிறையை நேரான

நித்தமும் வளர்ந்தது நிதியுஞ் சாதக
முற்றிடு தினத்தினி லோலை தீட்டினார் (அக)

ஈண்டுதன் றாயுட னிருந்த கோமக
னாண்டொரு நான்குசென் றழகின் வீறினான்
றாண்டிய பெரும்புகழ்ச் சோழ மண்டலங்
காண்டக வெங்கணுங் கான மானதே. (அ௨)

அன்புடைச் சாரமா முனியு மந்தலந்
தன்பொருட் டாகவே யிறந்த தன்மையால்
வன்புடைக் காவலன் மந்தி ரிக்குழா
மின்பமுற் றுறையுமவ் விடத்தி லெய்தினார். (அ௩)

தொல்லையி னமைச்சரோ சோழ மண்டலம்
புல்லிதா யிப்படிப் போந்த னீதியோ
வல்லிய முயர்த்தவன் மரபிற் றோன்றினோ
ரில்லையோ தேருமி னென்று கூறினன். (அ௪)

அமைச்சருந் திருவுள மாகி லையனே
யுமைக்கிறை யருளினா லுலக மேழையுஞ்
சுமக்குநல் லொருவனைச் சோழன் றோன்றலை
யிமைக்குமுன் கொணருவோ மென்று கூறினர். (அ௫)

காவலன் காவிரி கடக்குங் காலையிற்
றேவியும் புனலிடை வீழ்ந்து தீரமுற்
றாவியோ டிருந்தன ளறிமி னென்றனன்
யாவரும் புகழ்முனி யிருக்கை யெய்தினான். (அ௬)

சட்பதங் குடைமதத் தறுகண் யானையைக்
கட்படம் புனைந்துதண் கரையி னேகெனக்
கொட்புற விடினது கொணரு மென்றுதம்
முட்கலந் தமைச்சர்க ளொருமித் தேகினர். (௮௭)

முனிவனுக் கிவையெலா மொழிகு வாமெனந்
துனைவொடுஞ் சென்றுதங் கருத்தைச் சொல்லினு
ரனைவரு முயலுமென் றருளி னுனவர்
கனைகளிற் றினைவிழி கட்டி யேவினர். (௮௮)

அரசிப நடந்துல கனைத்துந் தேடியே
கரைபொரு காவிரிக் கரையிற் சண்பக
மருமலி திருநில மருங்கிற் சென்றது
திருமகன் சிதைத்தனன் சிற்றி லவ்விடை. (௮௯)

சிறுமகா ருடனவன் சிதைக்குஞ் சிற்றிலின்
மறுவறு கடகரி வந்து முன்பணிந்
திறைமகன் றனைக்காத் தெடுக்க லுற்றது
குறுமகா ரனைவரு மிரிந்து கூவினர். (௯௰)

தாயரை யடைந்துநின் றனையன் றன்னைவந்
தாயிருங் களிறெடுத் தசைத்த தென்றனர்
வாயினி லறைந்துகை வயிற்றில் வைத்தவ
ளேயவந் தணனுடன் றெழுது சொல்லினள். (௯௧)

அந்தண னவ்விடை யணுகு மெல்லையிற்
றந்தியுந் துதிக்கரஞ் சலித்து நின்றது

சிந்தையி னுணர்ந்தின்ற தேவி யேகரி
யிந்தன மிவன்பதத் தெழுது கென்றனன். (௯௨)

கீறினள் பதத்தினிற் கிரியி னுச்சியி
னேறிய கதிரென வெடுத்த தொண்கரி
வீறிய மத்தக மிசையிற் றோன்றினான்
றேறினள் சிவன்செய லென்று தேவியே. (௯௩)

திருநல மறையவர் மலைச் சிந்தினா
ரருமறை யந்தண னாசி கூறினா
னொருகரிக் கோடுகீ ழிருந்த வுள்ளடி
யிருகரிக் கோடுமே லிருக்க வுற்றதே. (௯௪)

உன்னத மதகரி யுவந்து சென்றருண்
மன்னிய திரிசிர மலைக்கொ ழுந்தனார்
சந்நிதி முன்னரா தரிக்க வைத்தது
சென்னிதன் சென்னியின் முடியைச் சேர்த்தினார்.

மந்திரக் கிழவருங் கிளையின் மாந்தருந்
தந்திரத் தலைவருந் தானை மாக்களுஞ்
சுந்தரத் துணைவரு முறுதிச் சுற்றமும்
வந்துடன் வளைந்தன வாரிபோலவே. (௯௬)

கழைச்சிலை யிவன்கரி காலச் சோழனென்
றழைத்தனர் கடமையு மாறி லொன்றுகொண்
டொழித்தனன் றுயரெலா முலகம் யாவையும்
பிழைத்தன பகைமையும் பிணியு மற்றவே. (௯௭)

கடலெனுங் காவிரிக் கரையுங் கட்டிமுன்
செடிபடு தென்கரைச் சிவால யங்களும்
வடகரை வாய்ந்தலை வயலு மாக்கினன்
படவர வின்முடிப் பார நீக்கினன். (கூ௯)

சோனுஞ் செழியனுந் திறைய ளந்திட
வீரனிப் படிபடி புரக்கும் வேலையிற்
சாரனென் பவன்புரி தவந்தி னன்மகிழ்ந்
தாரணந் தொழுமவ னருளி னெய்தினன். (கூகூ)

வரமுனி வணங்கினன் வரங்கள் யாவையுந்
தருகுவ முரையெனச் சாரன் கூறுவா
னருமலர் திருமதி யாற ணிந்தவா
பரகதி பெறவருள் பாலி யென்றனன். (௱)

இக்கதை விரும்பினோ ரெவர்க ளுங்கதி
புக்குறை யவும்வரம் பொழிக வென்றனன்
றக்கதென் றருண்மிகு சார மாமுனிக்
கக்கணஞ் சிவபத மருளிப் போயினன். (௱க)

முனிவனை வழுத்தினர் முனிவர் யாவரும்
புனிதன திணையடி புகழு மெந்தையே
யினியொரு கதையையு மியம்பு கென்றனர்
கனியொடு மயிர்தொடுங் கலந்து கூறுவான். (௱உ)

உறையூரழிந்தசருக்க

ஆக சருக்கம் ௰-க்கு திருவிருத்தம். சௌகூ௰௯.

சிவமயம்.

# தாயான சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

தோளை நெருக்கிக் கிளர்ந்திடையாற் சுமக்க
வரிதாய்ப் பகிரண்ட
கோள மளவுங் குவிமுலையார் திருமே
னியிற்செய் குங்குமமும்
வேளை முனிந்த வருந்தவத்தோர் மனத்தைத்
திருகு மெல்லோதிப்
பாளை மணமும் பரிமளிக்கும் பதிகா
விரிப்பூம் பட்டினமே. (க)

நச்சோ திமமுந் தொழுநடையார் நயனு
யுதமு னடைந்தோரைத்
தைச்சோ டையிலே கழுநீருஞ் செந்தா
மரையுந் தவம்புரிய
மைச்சோலையிலே விளையாடிக் குமிழ்மேற்
றிரும்பி வள்ளைசெறி
பச்சோலையிலே மையெழுதும் பதிகா
விரிப்பூம் பட்டினமே. (உ)

கலிநிலைத்துறை.

மாவிரிக்கும் பொழில்கள்சில மதனு ரிகளும் வயப்ப
ரியும், பூவிரிக்கு நெடுங்கணையு மொழியா தளிக்கும்

பொன்னகரங், காவிரிக்கு வடபாலாய் மகரா லயத்தின்
கரையதுவாய்ப், பாவிரிக்கும் புகழ்படைந்த பதிகா வி
ரிப்பூம் பட்டினமே. (௩)

வேறு.

எட விழ்ந்ததார்ப் பேதையர் மனல்களி விழைந்த
விட ழிந்திடப் பொருந்திரை நிரைகளே வெருண்டு
கூடி நின்றாநின் றரியநித் திலமணி கொண்டு
நாடி வேலையைத் தூர்த்திடுஞ் செழும்புகார் நகரம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

காளைய ருடனே காமக் கள்ளுண்டு
களித்த மாதர்
தோளினிற் பரிந்த முத்தத் தொகைமணி
தூரலி னோடே
நீளர மியத்தி னின்றும் விரைவுட
னெருங்கி வீழ்தன்
மீளவுங் கடலின் மீதே விளைந்திட
வித்தல் போலும். (௫)

முற்றிழை மடவார் சூடிக் கடிந்துவீழ்
முல்லை மாலை
சுற்றிய திரையா லாழிச் சுழியிடை
. யுலவுந் தோற்றங்
கற்றிரள் வரையாற் றேவ ரமிர்தினைக்
கடைந்த போதி

னறநெறழுந் தலையிற் றோன்று மாவுரி
யென்ன லாமே. (௯)

கலிநிலைத்துறை.

சிவன ருட்பெறு மியற்பகை நாயனார் சிறப்பா
லவத ரித்தது மன்றியே பிள்ளைவந் தருளத்
தவமி ழைத்தமா நகரமுன் றுங்குடித் தலைவா
நவநி திக்கெலாம் பிறப்பிடஞ் செழும்புகார் நகரம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அத்திரு நகரில் வாழு மாதன
குத்த னென்னும்
பித்திகை யலங்கன் மார்பன் பெருங்குடி
வணிக னென்பான்
றத்தையே யனைய தேவி தன்னுடன்
செருக்கு நாளிற்
புத்திர செல்வம் வேண்டிப் புரிந்தன
னிறைவர் பூசை. (அ)

மதலையைப் பெறமுன் னூழில் வரமிலா
நிலைமை யாலே
புதல்வியைப் பயந்தா னந்தப் புதல்வியுந்
தவழ்ந்து நின்று
குதலையுந் தெளிந்து பொன்னங் கொம்புபோல்
வளர்ந்தாண் மார்பிற்

றிதலையங் குரும்பை தோன்றிற் றனங்களுந்
திறையிட் டானே. (௯)

அத்தனு மகட்குத் தன்பே ரளித்தன
னதன்பின் னுகச்
சித்திர மயிலன் னாளைத் திரிசிரா
மலையில் வாழு
மெய்த்தந குத்த னென்னும் பெருங்குடி
வணிகன் வேட்டான்
மத்தகக் களிற்றோன் மானை யளகையான்
வரைந்த தென்ன. (௰)

அரதந பாலனன் களித்த வன்னமும்
விரிதந குத்தனு மிரதி வேட்டையிற்
பொருதன ரிளமுலைப் பூத ரங்களு
மிருபுய மலைகளு மெதிர்பு நின்றன. (௰௧)

குருகின நெரிதரக் குவளை சேப்புற
விருவரு முறைமுறை யிலவ வாயிதழ்
பருகினர் மெழுகெனப் பசும்ப த்திலே
யுருகினர் களைந்திரண் டுயிரொன் றாயினார் (௰௨)

இரதியு மதனனு மியைந்த வாறெனச்
சுரதமும் புலவியுந் துணிவு மெய்தநாண்
மருகனுந் தன்பதி மருவ வேண்டுமென்
றரதந பாலனுக் கறிவித் தானரோ. (௰௩)

மணிமுத லியபல வளித்து மாதுல
னிணைமலர்க் கரமெடுத் தேகு கென்றனன்
றுணைவி தன் வருத்தமுந் துயரு மாற்றியே
வணிகனுந் திரிசிரா மலையி லெய்தினான். (௰௪)

எய்தியங் கிருவரு மியைந்து நல்லறஞ்
செய்தன ளிளங்கொடி திரிசி ராமலை
மெய்யனை யன்பினால் வெள்ளி நாடொறுங்
கைதொழப் புகுந்தனள் கணவ னேவலால் (௰௫)

இருவரு மிப்படி யியங்கு நாளிலே
யாதந பாலனு மிறுதி யாயினா
னுருகிய கிளைஞரிங் கோலை யேவினார்
மருகனு மங்கையுங் கண்டு மாழ்கினார். (௰௬)

தீயுறு மயிலெனத் திரியுந் திண்கணை
பாயிளம் பிணையெனப் பதைக்கும் பைந்தொடி
தாயனை நினைந்துகுந் தனித்தி யோவெனு
மாயிரந் தாரையா வழுது விம்முமே. (௰௭)

முலைகளும் விழிசொரி புனலின் மூழ்கின
வலைதரு புனலிடை யணங்கு மூழ்கினா
ளுலையுறு மெழுகென வுருகி னாளவள்
கலைகளுஞ் சொரிந்தன கண்ணி னீரையே. (௰௮)

மங்கையை மகிழ்நனு மார்பிற் புல்கியும்
பங்கய மலர்க்கரம் பற்றி நல்கியுஞ்

செங்கய லொழுகுநித் திலங்கண் மாற்றினு
னங்கவ ளடைவிலே துயரு மாற்றினாள். (௰௯)

சீரிய விரதமும் விருந்துஞ் செய்கையு
மோரிய லாண்மையு மொழுகு நாளிலே
வாரியிற் கவுத்துவ மணியை நேரெனக்
காரிகை வயிற்றிளங் கருப்ப முற்றதே. (௨௰)

சூனிறைந் ததுவரி தொய்யி னீங்கின
பானிறம் படைத்தது குமுதம் பங்கய
மேனிகழ் சுரும்பென முலைக்கண் வீறின
வானிடை வயங்கிய துரோம வல்லியே. (௨௧)

அன்னையு மகள்செய லறிய வேண்டுமென்
றுன்னின ளப்பொழு துவரி நீரயின்
மின்னுயிர் பெருமுகி லுறை வீழ்ந்தன
பொன்னியு மிருகரை புரண்டு வந்ததே. (௨௨)

ஆறது தடையினு லன்னை யேகுநன்
மாறின ளாதர வதிய றிந்திலள்
பேறுறு பிறந்தகம் பெரிதுஞ் செய்திடக்
கூறரும் பொருளெலாங் கொண்டு செல்லுமே.

பூளையின் சுமையெனக் குழல்பொ லிந்திட
பாளையங் குழலிதழ்ப் பவளச் சேடியர்
தோளையு மணந்துவெண் டுகிலை மேற்கொடு
நாளைவந் திடுமல தின்று நண்ணுமே. (௨௪)

எதிர்நடந் தன்னையை யிறுகப் புல்லுவோங்
கதிநடந் திளைந்தசெங் கமலம் பற்றுவோ
மதிமுக வெயர்வெலா மாற்று வோமென
வதிசய வுணர்வினு லனைத்து மெண்ணினுள்.

மின்றிகழ் மருங்குலா ணினையும் வேலையிற்
றென்றிசை விளங்கிய தேவர் நாயகன்
குன்றெனு நெடுஞ்சிலை கொண்ட நாயகன்
மன்றலங் கருங்குழன் மடந்தை நாயகன். (உசு)

கலிநிலைத்துறை.

சங்க ரன்சிவன் சதாசிவ னீசனீ சானன்
புங்க வன்றிரி புராந்தகன் புராதனன் புராணன்
கங்கை நாயகன் கறைமிடற் றிறைநுதற் கண்ணு
னெங்க ளுயக னிராமியன் சிராமலை யிறைவன்.

பூர ணன்பரன் பராபரன் வெள்ளியம் பொருப்பன்
கார ணன்மத னுந்தகன் காலனைக் கடிந்தோன்
வார ணந்தனை யுரித்தவன் மறைப்பொருள் வகுந்தோ
னுர ணன்றனக் கரியவன் சிராமலை நாதன். (உஅ)

முடித்த வெண்பிறை நிகரென வளைந்திடு முதுகி
லடுத்த வெண்ணிலா வளைந்தபோ னரைக்குழ லசையத்
திடத்தி னுருரு ணடத்துவோ மெனவொரு செங்கோல
பிடித்த வாறென வேணுதண் டங்கையிற் பிறங்க. ()

ஏட விழ்ந்தபூங் குழலிதன் விரதநன் றெனக்கொண்
டாடு மாறென்னத் திருமுக மண்டல மசையச்

சூடு கங்கையின் றிவலைபோ னுதல்வெயர் துளிக்க
நீடு கொன்றைபோ லொருபணி களத்திடை நிகழ.

நின்று நின்றுசென் றிளைப்புற நெடிதுழுச் செறிய
வொன்று செங்கையிற் கழையின்மே லுடலெலா மொ
டுக்கிக், கன்று மானையு மழுவையும் விடையையுங் கர
ந்து, மன்றி லாடலு மொழிந்தவ னன்னைபோல் வந்
தான். (௯௧)

காய பண்டமு மெண்ணெயின் கலசமுங் கனகத்
தூய முத்தணி கலன்களும் விலையிலாத் துகிலு
மேய மங்கைய ரிருவர்மேற் சுமைகளா வெடுப்ப
மாய வன்றனக் கரியவ னெளியனாய் வந்தான். (௯௨)

றார வந்திடு மவளையின் றவளெனத் துணிந்தாள்
சேர வந்திடும் பொழுதினி லெழுந்தெதிர் சென்று
பார வந்தனை புரிந்திரு பதங்களிற் பணிந்தா
ளார வந்திரு கரங்களாற் றழுவின ளன்னை. (௯௩)

மோந்து கொண்டன ளுச்சியை மோந்தனண் முகத்
தைக், காந்த ளுந்தொழுங் கரங்களை யழுத்தினள் கண்
ணிற், பாய்ந்த கண்ணினீர் புலர்ந்திட வருண்மொழி
பகர்ந்து, சாய்ந்த கொம்புநேர் மகளுட னிருந்தன டவி
சில். (௯௪)

எண்ணி லாவருங் காயபண் டங்களா மெவையும்
வண்ண மேகலைப் பேழையுங் கொணர்ந்தமங் கையருக்

குன்னு நீர்முத லெறிந்தநல் லடிசிலு முதவிக்
கண்ணே நேரொனுந் தாயுட னிருந்தனள் களித்து. (௩டு)

மற்றை நாளிலே யுதரமொரந் தழுங்கின மகளைப்
பெற்ற தாயெடுந் தணைத்துமேற் றயிலமும் பெய்து
முற்று மன்பினன் மருந்துவத் தொழிலெலா முடித்
தாள், குற்ற மொன்றிலா மடந்தையும் பயந்தனள்
குழவி. (௩௬)

குழவி யின்றவட் கருமருந் தெண்ணெயுங் கொடுத்
தே, யெழுதி னத்தள விழைந்திடுஞ் செயலெலா மியற்றி, யழகு தொட்டிலுட் டுயிற்றியங் கொருமதி யான
வா,மழக னிற்றினை முருகவே னெனும்படி வளர்த்தாள்.

சிதலை சிற்றெறும் பிள்ளுஞ்சினை சிலையினுட் டேரை
பதக மானிட ரிமையவ ரிந்திரன் பதுமன்
முதலி னோர்தமை வளர்த்தரு ளிறையெதிர் முகமாய்
மதலை யொன்றினை வளர்த்தது புதுமையோ மறையீர்.

மையு லாமழைக் கருமுகிற் படத்தினை மாற்றித்
துய்ய வெண்முகிற் படமெனும் விதானம்வான் றுலக்
கிற், றைய நுண்ணிடை யாதந வதியையங் கறியப,
பையவந்தன ளவளைமெய் யாகமுன் பயந்தாள். (௩௯)

மாது லன்பெருந் தேவிதன் மனையிடை வருதல்
காத லன்பினைற் பெருந்தந குத்தனுங் கண்டா

னேதி லார்களிவ் விருவரில் யாவரோ வென்று
ஞேது முன்னவள் புகுந்தனண் கிடலா ளுறையுள்.

முன்னர் வந்திருந் தருளிய தாயெதிர் முகமாய்ப்
பின்னர் வந்ததா யிருந்தன ளதிசயம் பிறந்த
தன்னை யாவளென் றாதர வதிமருண் டணைந்தாண்
மின்னை நேரென விசும்பிலே மறைந்தனன் விமலன்.()

உந்தி யாறணி சடையிளம் பிறைதனக் குறவுத்
தொந்த முண்டென வருமதி போற்குடை துலங்க
விந்த மண்டல மிந்துமண் டலமென விறங்கி
வந்த தாரகைக் கணமெனச் சொரிந்திட மலர்கள்.(சஉ)

தேடி யோதிமம் பறந்திட விரிந்தவெண் சிறை
போன், மாடி ரண்டிறு மசைந்தன சாமரை வயங்கத்,
தோடு சோகுழை மருவிய தும்புரு விசைகொண், டா
டு பாமமென வாலவட் டங்கணின் றசைய. (சங)

அந்த ரத்திலோ ரிருபது விற்கிடை யளவின்
மந்த ரப்பெருஞ் சிகரிமேல் வருமணி மலைபோற்
சுந்த ரத்தொ ராளிர விடையின்மேற் றோன்றினன் றோ
ன்ற,லிந்தி ரபெய ருடையவன் முதலினோ ரிறைஞ்ச.

தேவ துந்துபி.முழங்கின முழங்கின சின்ன
மாவ லம்புரி யொலித்தன வொலித்தன மதங்க
மூவ ரோடுமுப் பதின்மரு முனிவரு முளரிப்
பூவை நேர்சொலு மிருகரங் குவித்தெதிர் போற்ற.

தொல்லை யாகம நான்மறை யெதிரெதிர் துதிக்க
வல்லி நாண்மலாக் கடவுளு மம்புய மனையின்
வல்லி நாதனு நடந்திரு புடையினும் வணங்க
மெல்ல மெல்லவே யுவந்துனைத் தருளினுன் விடையை

வேத வேள்வியந் தணர்கள்பா சுபதர்மா விரத
ராதி சைவர்க ளாதியா வர்லய மமைப்பேர்
காத லெந்தெழுந் துண்டிப்பவ ரனைவருங் காணப்
பூத நாயக னுடன்றிருக் கோயிலுட் புகுந்தான். (சள)

நாயி னுங்கடை யானவ ராயினு நயந்தாற்
சேயி னும்பரி வாகவந் தருள்செயுஞ் சிவனை
யாயி ரம்பெய ருடையவண் ணலையுல கனைத்துந்
தாயி னல்லவ னல்லவ னென்றன தழைக்க. (சஅ)

கலிவிருத்தம்.

மாதரு குத்தனு மனைம டந்தையு
மேதமில் கிளைஞரு மிமய நாயகி
நாதனை யனுதினம் பணிந்து நாரணன்
வேதனு மறிவரும் பதத்தின் மேவினர். (சகூ)

சத்திய மிதுவெனச் சாற்றி னன்முனி
பத்திகொ டனைவரும் பரவிக் கூறுவா
ரித்தல மினையதே யிதனில் வைகுவார்
முத்தியை யடைவது மொழிய வேண்டுமோ.

